# ஸ்ரீ கரபாத்திர
# சிவப்பிரகாச சுவாமிகள்




(வாழ்க்கை வரலாறு)

சுவாமி பிரபஞ்சநாதன்

ஓம் ஸ்ரீ குருவே சரணம்

# ஸ்ரீ கரபாத்திர சுவாமிகள்

## (வாழ்க்கை வரலாறு)




தொகுப்பு

சுவாமி பிரபஞ்சநாதன்

ஸ்ரீ குருவே சரணம்.




**ஸ்ரீ ல ஸ்ரீ கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள்**

# ஸ்ரீ கரபாத்திர சுவாமிகள்

## (வாழ்க்கை வரலாறு)

நம்முள் உள்ள அறியாமை இருளை நீக்கி, ஒளி பொருந்திய ஆன்ம ஞானத்தை அளிப்பவரே குரு. அத்தகைய குருவானவர் நமக்கு சத்தியத்தைக் காட்டிக் கொடுப்பதினால், நாம் அவரை சத்குரு என்று அழைக்கின்றோம்.

அத்தகைய குருவருள் இருந்தால் மட்டும்தான், அவரை அடைபவர்களுக்கு திருவருள் உண்டாகும்.

அதாவது, நம்மையே நம்மால் முழுமையாகக் காண முடியுமா? என்றால், நிச்சயமாக முடியாது. காரணம், நமது கண்ணையே நம்மால் காண்பது நடக்காத காரியம் அல்லவா?

அனைத்தையும் காண்கின்ற கண்களினால், தன் கண்ணை காண்பதற்கு அதற்கு வேறாக ஒரு முகம் பார்க்கும் கண்ணாடி அவசியமாகின்றது.

அதாவது, நம் கண்களை நாம் பார்தேயாக வேண்டும் எனில், அதற்கு வேறாக ஒரு முகம்

பார்க்கும் கண்ணாடித் தேவைப்படுவது போன்று, நம்மைப் பற்றி நாம் முழுமையாக அறிந்துக்கொள்ள வேண்டுமானால், அதற்கு அவசியமாக ஒரு குருவும் தேவைப்படுகின்றார்.

அத்தகைய அற்புதமான ஒரு குருவைப் பற்றி அவசியம் அனைவரும் அறிந்துக் கொள்ள வேண்டும்.

ஆம்!, அவரே **ஸ்ரீ ல ஸ்ரீ கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள்** ஆவார்.

சென்னையில் உள்ள வியாசர்பாடியில் அருள் பாலிக்கும் அற்புதமான குரு கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள் பற்றிக் கூற வேண்டுமானால், இந்த நூலை இன்னும் ஏராளமான பக்கங்களில் எழுத வேண்டிய அவசியம் இருக்கும்.

இருப்பினும், இயன்ற அளவுகளில் இவரது வாழ்க்கை வரலாற்றினை இங்கு கொடுத்துள்ளோம்.

**ஸ்ரீ ல ஸ்ரீ கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள்** அவர்களின் அதிர்ஷ்டானம் உள்ள அந்த கோவில் ஐயாயிரம் ஆண்டுகள் பழமையான கோவில் ஆகும்.

பகவான் ஸ்ரீவியாசர் வழிபட்ட விஷேசமான ஸ்தலம் என்பதினால், அந்த ஊருக்கு வியாசர்பாடி

என்னும் பெயர் வந்ததாக, அந்த கோவில் வரலாறு கூறுகின்றது.

மேலும், இந்த ஸ்தலத்து சிவன் சூரியனால் பூஜிக்கப்பட்டவர். அதனால் தான் இந்த ஸ்தலத்து சிவனுக்கு ரவீஸ்வரன் என்னும் பெயர் வந்தது.

சூரியனின் பல பெயர்களில் ரவியும் ஒன்று. அத்துடன், வியாசர் முதலான பல்வேறு ஞானிகள் வந்து வழிபட்ட பொழுது, இந்த கோவில் இருந்த ஊர் ஒரு அழகிய கிராமமாக இருந்தது.

சென்ற நூற்றாண்டில் கூட, அந்த கிராமத்தின் பசுமையை குறிக்கும் விதமாக அம்மனுக்கு மரகத அம்மன் என்னும் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

இந்த ஸ்தலத்து சிவனை தினந்தோறும் தோன்றி, மறையும் சூரியன் வழிபடும் விதமாக, மதியம் உச்சி வேளையில், மற்றும் மாலையில் சூரிய கிரகணங்களின் ஒளி, அந்த கோவில் சிவ லிங்கத்தின் மீது மாலை போன்று விழுமாறு, இந்த கோவில் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னதாகவே இவ்வாறு கட்டப் பட்டுள்ளது.

இன்று சென்னை பெரு நகரமாக மாறி, நிறைய கட்டிடங்கள் உண்டாகி விட்டதால், முன்பு கட்டப்பட்ட பொழுது, விழுந்த அந்த சூரியனின் ஒளி, தற்பொழுது

அந்த சிவ லிங்கத்தின் மீது படவில்லையென்றாலும். அந்த சூரியன் சிவனுக்கு செய்யும் வழிபாடு தொடர்ந்து கொண்டு தான் இருக்கிறது.

அத்தகைய அழகிய தூய மாதவம் செய்தது தொண்டை நன்னாடு என்று பெரிய புராணம் இயற்றிய சேக்கிழாராலும், தெண்ணீர் வயல் தொண்டை நன்னாடு சான்றோருடைத்து என்று ஔவையார் அவர்களாலும் போற்றப்பட்ட தொண்டை நன்னாட்டில் அவதரித்தவர் தான் கரபாத்திர சுவாமிகள் அவர்கள். ஆம்! அந்த தொண்டை நன்னாடு என்பது தற்போதைய சென்னை மாநகரமே ஆகும். அன்று, அந்த சென்னை 24 கோட்டங்களாக இருந்தது. அவைகள்.

1.புழல்கோட்டம், 2.ஈக்காட்டுக்கோட்டம், 3.மணவிற்கோட்டம், 4.செங்காட்டுக்கோட்டம், 5.பையூர்க்கோட்டம், 6.எயில்கோட்டம், 7.தாமல்கோட்டம், 8.ஊற்றுக்காட்டுக்கோட்டம், 9.களத்தூர்க்கோட்டம், 10.செம்பூர்க்கோட்டம், 11.ஆம்பூர்க்கோட்டம், 12.வெண்குன்றக்கோட்டம், 13.பல்குன்றக்கோட்டம், 14.இளங்காட்டுக்கோட்டம், 15.காலியூர்க்கோட்டம், 16.செங்கரைக்கோட்டம், 17.பழுவூர்க்கோட்டம், 18.கடிகூர்க்கோட்டம், 19. செந்திருக்கைக்கோட்டம், 20.குன்றவர்த்தனக்கோட்டம், 21.வேங்கடக்கோட்டம், 22.சேத்தூர்க்கோட்டம், 23.வேலூர்க்கோட்டம், 24.புலியூர்க்கோட்டம் என்பவையே ஆகும்.

இக்கோட்டங்களில் சென்னை மற்றும் அதைச் சூழ்ந்துள்ள அனைத்து ஊர்களையும் தன்னகத்தே கொண்டு விளங்கினவைகளான புழல், புலியூர், மணவில் என்னும் மூன்று கோட்டங்களாகும்.

அத்தகைய சென்னை உள்ள திருப்போரூரில் செங்கமலம் அம்மையார் அவர்களுக்கும், முத்துசாமி அய்யா அவர்களுக்கும் மகனாக அவதரித்தவர் தான் இந்த **சிவப்பிரகாசர்** ஆவார்.

**விளையும் பயிர் முளையிலேயே தெரியும்** என்னும் முதுமொழிக்கு ஏற்ப சுவாமிகள் தமது 3 - வது, 4 - வது வயதில் கூட விளையாட்டில் நாட்டம் இல்லாமல், எப்பொழுதும் தன் கண்களை மூடியவாறு மௌன நிலையில் மணிக்கணக்காக அமர்ந்து விடுவார்.

ஒரு குழந்தைக்கு இயற்கையாய் இருக்க வேண்டிய இயல்பான குறும்புகள் எதுவும் அவரிடம் இல்லை, அத்துடன் சுட்டி தனம் போன்ற, எந்த விதமான சேட்டைகளையும் அவர் செய்வதில்லை.

எப்பொழுதும் மௌனமாகவும், அத்துடன் ஆழ்ந்த அமைதியாகவும், எதையோ வெறித்துப் பார்த்துக்கொண்டு, எப்பொழுதும் சும்மா உட்கார்ந்துக் கொண்டு மட்டுமே இருந்தால், இந்தக் குழந்தையைப் பெற்றெடுத்தவர்கள் என்ன நினைப்பார்கள்?

அதாவது, அந்தக் குழந்தையின் மூளையில் ஏதோ குறைபாடு உள்ளது என்று நினைப்பார்கள்.

அவ்வாறே அந்த சுவாமிகளின் பெற்றோர்களும் நினைத்தார்கள். பயந்தார்கள்.

இது தெய்வீக குழந்தை என்பதை அவரது பெற்றோர்களும், ஏன் உடன் பிறந்தவர்களாலும் கூட புரிந்துக்கொள்ள முடியவில்லை.

இவர் இவரது பெற்றோர்களுக்கு ரத்தினவேல், மாணிக்கம், சிவ ஞானம் ஆகிய மூன்று மகன்கள் பிறந்த பிறகே, **சிவப்பிரகாசம்** என்ற கடைக்குட்டியாக கடைசியாகப் பிறந்தார்.

இந்த சிவப்பிரகாச சுவாமிகளுக்கு 16 வயது இருக்கும் பொழுது, அவரின் தந்தை முத்துசாமி காலமானார்.

அதன்பிறகு, இவர் தனது அண்ணன்களோடு சேர்ந்து வெற்றிலை ஏல வியாபரத்தை வெகு பெரிய அளவில் நடத்தினார்.

அந்த சமயத்தில் வேதாந்தம், சித்தாந்தம் ஆகியவைகளைப் பயின்று, அதில் கரைக்கண்ட ரத்தின தேசிகரிடம், இந்த சிவப்பிரகாசம் பல நூல்களைப் பயின்றார்.

அதிலே, சிவப்பிரகாசம் சுவாமிகள் மனதில் மிகப்பெரிய மாற்றத்தை உண்டாக்கிய நூல் "**ரிபு கீதை**" என்பதாகும்.

இந்த நூலை இவருக்கு, இவரது குரு பரிசாக அளித்து படிக்கக் கூறினார்.

அதாவது, பகவத் கீதையைப் போன்று, அனேக விதமான கீதைகள் உள்ளன. அவைகள், மொத்தம் 26 ஆகும்.

1.ரிபு கீதை, 2.பிட்சு கீதை, 3.பராசர கீதை, 4.போத்திய கீதை, 5.ஷடாஜ கீதை, 6.உதத்திய கீதை, 7.ராம கீதை, 8.தேவி கீதை, 9.ஹம்ச கீதை, 10.ஹரித கீதை, 11.சம்பக கீதை, 12.வாமதேவ கீதை, 13.சூரிய கீதை, 14.சிவ கீதை, 15.கபில கீதை, 16.மங்கி கீதை, 17.ரிஷப கீதை, 18.விருத்திர கீதை, 19.வசிஷ்ட கீதை, 20.உத்தவ கீதை, 21.பிரம்ம கீதை, 23.பாண்டவ கீதை, 24.உத்தர கீதை, 25.அவதூத கீதை, 26.வியாச கீதை போன்றவைகள் எனலாம்.

இதிலே, **ரிபுகீதை** என்ற இந்த நூல், நாம் காணுகின்ற அனைத்துமே அந்த பிரம்மம் மட்டுமே என்றும், நாம் அனைவருமே அந்த பிரம்மத்தின் பிரதிபிம்ப ஸ்வரூபமே என்றும் எளிதாக, சிவ

ரகசியத்தின் இதயஸ்தானமாக நம்மை நமக்குக் காட்டிக் கொடுக்கின்றது.

அத்தகைய சிவ ரகசியத்தில், இந்த **ரிபுகீதை** என்பது, பகவான் பரமசிவனால் ரிபு முனிவருக்கும், பின்னர் ரிபு முனிவரால் திருக்கேதாரத்தில் நிதாகர் என்ற அவரது சிஷ்யருக்கும் உபதேசிக்கப்பட்டது.

சிவரகசியத்தில் **ரிபுகீதை** 50 அத்தியாயங்களில் 2493 சுலோகங்களில் கூறப்பட்டுள்ளது.

அதாவது, நாம் காணும் அனைத்துமே பிரம்மம் என்றும், நாம் முதல் அனைத்தும் அந்த பிரம்மத்தின் ஸ்வரூபமே என்றும், இதனை அறியாது, அந்த பிரம்மத்திற்கு வேறாக தன்னைப் பிரித்துப் பார்க்கின்ற பேதமை என்ற மோகத்தை முற்றிலும் விலக்கு என்று, ரிபு முனிவர் தமது சீடரான நிதாகருக்கு அருளியது இந்த **ரிபுகீதை** ஆகும்.

சிவப்பிரகாசம் சுவாமிகளுக்குப் பதினாறு வயது பூர்த்தியாகும் போது, அவரது குடும்பம் சென்னைக்கு வந்து சேர்ந்தது.

எதிலும் பற்றற்று இருந்து வந்த சிவப்பிரகாச சுவாமிகள், வேதாந்த பானு என்ற அத்யாத்மிக நூலை சைவ இரத்தின தேசிகரிடம் கற்றுத் தேர்ந்தார்.

அடிக்கடி தனியான இடம் தேடி, யோகப் பயிற்சியில் ஈடுபட்டு வந்த சுவாமிகள், ஒருமுறை நிர்விகற்ப சமாதி நிலையை அடைந்தபோது, அவர் இறந்து போனதாகக் கருதி, அவரது குடும்பத்தினர் கதறி அழுதனர்.

சுவாமிகள் அந்த நிலையிலிருந்து மீண்ட பின்பு, அவரது பெற்றோர் அதிகம் அச்சமுற்று அவருக்கு உடனடியாகத் திருமணம் செய்விக்க முயற்சி செய்தனர்.

சுவாமிகள் அந்த திருமண ஏற்பாட்டில் இருந்து தப்பிக்க விரும்பி, திருவொற்றியூர் பட்டினத்தடிகளின் ஆலயத்திற்குச் சென்று, தாம் அணிந்திருந்த அனைத்து உடைகளைத் துறந்து, கோவணத்தை மட்டுமே உடையாகக் கொண்டார்.

அப்போது அவருக்கு வயது பத்தொன்பது ஆகியிருந்தது. சுவாமிகளைத் தேடி வந்த அவரது தமையனார் அவரை மீண்டும் தங்கள் இல்லத்திற்கு அழைத்து வந்தார்கள். அவரது அந்த உடைகளற்ற கோலத்தைக் கண்ட சுவாமிகளின் அன்னையார் அதிர்ச்சி அடைந்து, அவரை தமது இல்லத்திற்குள் வருமாறு அழைத்தார்.

சுவாமிகள் அந்த இல்லத்திற்குள் வர மாட்டேன் என்று மறுத்துவிட்டு, அந்த வீட்டுத் திண்ணையில் வெளியேயே அமர்ந்துக் கொண்டார்.

அவரது அன்னையார் உணவு கொடுக்க முன் வந்த போது, இதுதான் விதி என்று கூறித் தமது கரத்தினை நீட்டி உணவைப் பெற்று உண்ணத் தொடங்கினார். அதில் மூன்று பிடி அன்னம் பெற்று உண்டு விட்டு அங்கிருந்து புறப்பட்டார்.

அவர் வாழ்ந்த காலம் முழுவதும், வெறும் தமது கரத்தில் மட்டுமே அன்னம் பெற்று உண்டதால், சுவாமிகளுக்குக் **கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள்** என்ற பெயர் நிலைத்தது.

பின்னர் திருவான்மியூரில் ஒரு ஆசிரமத்திற்குச் சென்று அங்கிருந்த மரத்தினடியில் தவமியற்றினார்.

அன்பர் ஒருவரின் வேண்டுகோளை ஏற்று சூளை செங்கல்வராயன் தோட்டத்திற்குச் சென்று ஒரு கிச்சிலி மரத்தினடியில் ஐம்புலன்களை ஒடுக்கிச் சமாதி நிலையிலிருந்தார்.

இங்கு தம்மைத் தரிசிக்க வரும் பக்தர்களால் தமது தவத்திற்கு இடையூறு ஏற்படுகிறது என்று கருதி, ஒருவருமறியாமல் பொதிகை மலைக்கு புறப்பட்டுச் சென்றார்.

அங்கு அவர் அகத்தியர் ஆசிரமத்தின் அருகில் ஒரு மரத்தினடியில் நிஷ்டையில் இருந்தார்.

அங்குதான் அவர் தேடிய அரிய ஞானம் அடைய முடிந்தது. அத்துடன் அனைத்து சித்துக்களும் அவரை வந்தடைந்தன. மூன்று ஆண்டுகள் அங்கேயே தங்கிவிட்டார். அவருடைய அன்பர்கள் அவரைத் தேடிக் கண்டுபிடித்து, மீண்டும் அவரை சென்னைக்கு அழைத்து வந்து ஒரு தோட்டத்தில் தங்க வைத்தனர்.

கரபாத்திர சுவாமிகள் தங்கியிருந்த தோட்டத்தில் அவருக்கு ஒரு ஆசிரமம் அமைத்துக் கொடுத்தனர். அந்த ஆசிரமத்தினுள் நாற்பத்தெட்டு நாட்கள் வரை உணவின்றி சமாதி நிலையில் இருந்தார்.

பின்னர் தமது அன்பர்களுக்கு உபதேசம் செய்ததுடன் '**ஞான சகாய விளக்கம்**', '**மனன சிந்தாமணி**' போன்ற அற்புதமான அரிய நூல்களையும் இயற்றினார்.

அத்துடன் "**ஸ்ரீ அத்வைத போத தீபிகா**" என்ற சமஸ்கிருத நூலையும் ஆத்ம ஞான அன்பர்களுக்காக கரபாத்திர சுவாமிகள் இயற்றியுள்ளார்.

அத்துடன் பல்வேறு மொழி விற்பன்னர்களை அழைத்துவந்து யோக நூல்களைத் தமிழில் இயற்றச் செய்தார்.

அதுமட்டுமின்றி, சாதுக்களுக்கு நிரந்தரமாக ஒரு மடம் அமைக்க விரும்பினார். இதனையறிந்த அவரது தொண்டர்களில் ஒருவர் சென்னை வியாசர்பாடியில்

நாகர் ஆலயம், குளம் உட்பட்ட ஒரு தோட்டத்தைக் கிரயம் பெறுவதற்கு உதவினார்.

சுவாமிகள் அங்கு ‘**ஆனந்தாசிரமம்**’ அமைக்கத் துவங்கியதும், அது சாமியார் தோட்டம் என்ற பெயரைப் பெற்றது.

தமது ஞான யோகத்தால் பல சித்துக்களைப் பெற்ற கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள் வெளிப் படையாக எந்த சித்துக்களையும் நிகழ்த்திக் காட்டியதே இல்லை. தம்மை நாடி வரும் பக்தர்களின் உடல் மற்றும் மனம் சம்பந்தப்பட்ட குறைகளைத் தமது பார்வையாலும், வார்த்தையாலும் மட்டுமே தீர்த்து வைத்திருக்கிறார்.

தமது உடலிலிருந்து உயிர் பிரியும் நேரம் வந்து விட்டதை அறிந்துக் கொண்டு, அவர் மூன்று நாட்களுக்கு முன்பே அதனைத் தமது பக்தர்களுக்கு அறிவித்து விட்டு ‘**சம்போ சம்போ**’ என்று உரத்துக் கூறிக்கொண்டே, அவர் ஆழ்ந்த யோகத்தில் அமர்ந்து விட்டார்.

பிங்கள ஆண்டு, பங்குனி மாதம், குரு வாரம் உத்திராட நட்சத்திரத்தில் கரபாத்திர சுவாமிகள் விதேக கைவல்யத்தை அடைந்தார்.

பக்தர்கள் கரபாத்திர சுவாமிகளின் திருமேனியை முறைப்படி சமாதி செய்து, சமாதியின் மீது சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தனர்.

இப்போது சுவாமிகளின் ஜீவசமாதி மிகப் பெரும் சிவாலயமாக உருவாகியுள்ளது.



ஒரே ஒரு ஞானியாகிய ஸ்ரீ கரபாத்திர சுவாமிகளின் அதிஸ்டானம் என்று ஆரம்பித்து, அங்கு தற்பொழுது ஒன்பது ஞானியர்களின் சீவ சமாதிகள் உள்ள அதிஸ்டான கோவில்கள் காணப்படுகின்றன.






காணலாம்.




இந்த ஆலயத்தைக் கட்டி முடித்த அவரது சிஷ்யர் ஸ்ரீமுக்தாநந்தா சுவாமிகள் சமாதியையும் இங்கு காணலாம்.



இவர் அதிஷ்டானம் உள்ள அதே இடத்தில்தான் இவரது ஒன்பது சீடர்களின் அற்புத அதிஸ்டானங்களும் அமைந்து உள்ளது.

ஆன்ம அறிதலுக்காக அலைகின்ற அனைத்து மெய்யன்பர்களும் அவசியம் இந்த **ஸ்ரீ கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள்** அதிர்ஸ்டானம் சென்று, அந்த அற்புத மகானின் அதிஸ்டானத்தை வழிபட்டு, அவரது உன்னத அருளினால் ஆன்ம ஞானத்தை அவசியம் அடைந்திட முடியும்.

அத்துடன், இவரது அற்புத படைப்பான ஆன்ம ஞான நூலாகிய "**ஸ்ரீ அத்வைத போத தீபிகா**" என்ற

சமஸ்கிருத நூலை பெயர் வெளியிட விரும்பாத ஒரு ஆன்ம ஞானி அழகிய தமிழ் மொழியில் மொழிப் பெயர்த்து கொடுத்து உள்ளார். அந்த அரிய நூலில் எட்டு அத்தியாயங்கள் மட்டுமே கிடைக்கப்பெற்று உள்ளதால், அதை பகவான் ஸ்ரீ ரமணாஸ்ரமம் ஆங்கிலத்தில் மொழிப்பெயர்த்து அனைத்து வெளி நாடு வாழ் அன்பர்களும் அவசியம் பயனடையும் பொருட்டு கொடுத்துள்ளது.

அந்த "**ஸ்ரீ அத்வைத போத தீபிகா**" என்ற ஆங்கில நூலை திரு. எஸ்.ராமன் அய்யா அவர்கள் மீண்டும் தமிழாக்கம் செய்துக் கொடுத்துள்ளார்.

அதை ஆவலுடன் படிக்க விரும்பும் அன்பர்கள், கீழே கொடுக்கப்பட்டுள்ள இணையதள முகவரிக்குச் சென்று, அந்த "**அத்வைத ஞான தீபம்**" என்ற தமிழ் நூலைப் பதிவிறக்கம் செய்து படித்துப் பயனடைய வேண்டுமாய் பணிவன்புடன் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

http://prapanjavidya.blogspot.com/2020/09/blog-post_1.html

நன்றி!

**ஓம் தத் சத்!**

# ஸ்ரீ கரபாத்திர சிவப்பிரகாஸ சுவாமிகள்




# வாழ்க்கை வரலாறு